உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# துறவு.

**துறவாவது**: - நற்குணம் நிறைந்த கற்புடைய மனைவியோடு இல்லற நடாத்தப்புக்கு யாவர்மாட்டும் அன்புகொண்டு இருவகை விருந் தினரையும் பாதுகாத்து ஏனைய கடமைகளையும் வழுவாது செய்து, விலக்கியவற்றை விடுத்து ஒழுகிவருங்கால், கல்வி கேள்விகளாலும் ஆசார்யோபதேசத்தாலும் அறிவுமுதிர்ச்சி பெற்றுப்பிறவிக்கு அஞ்சி வீடுபேற்றினைக் காதலித்து, எல்லாப் பொருள்களும் பந்தவே துவா தலை யுணர்ந்து யான் என்னும் அகப்பற்றையும், எனதென்னும் புறப் பற்றையும் அவற்றின் நிலையாமை நோக்கி நீத்து விடுத்தலாம். இதனை" தத்தம் வருணத்துக்கும் நிலைக்குமுரிய ஒழுக்கங்களை வழுவா தொழுக அறம் வளரும்; அறம் வளரப் பாவந் தேயும், பாவந்தேய அறியாமை நீங்கும், அறியாமை நீங்க நித்த அநித்தங்களது வேறு பாட்டுணர்வும் அழிதன்மாலையவாய இம்மை மறுமை இன்பங்களி னுவர்ப்பும் பிறவித் துன்பங்களுந் தோன்றும்; அவை தோன்ற, வீட்டின்கணாசையுண்டாம்; அஃதுண்டாகப் பிறவிக்குக் காரணமாகிய யோகமுயற்சி யுண்டாம்? அஃதுண்டாக மெய்யுணர்வு பிறந்து புறப்பற்றாகிய யானென்பதும் விடும்; ஆதலால் இல்விண்டு பற்றையும் முறையே யுவர்த்து விடுதலெனக்கொள்க" என்னும் பரிமேலழகர் வாக்கியங்களைக் கொண்டு தெளிக.

**துறவுற்குக் காரணம்**: - பன்னாளாகத் தன தெனக் கொண்டு அபிமானித்து வந்த பல பொருள்களையும் தேடுங்காலத்தும், அவற் றைப்பாது காக்கும் போது, பின்னர் அவற்றை இழக்க நேரிட்ட காலத்தும் துன்பமே யுளதாகின்றது. மனைவி மக்களாதியராற் பெறற்பாலதாகிய இன்பம் கடுகளவாகித் துன்பம் மலையளவாகின் றது. இத்தகைய துன்பத்தைத் தருகின்ற பொருள் கட்கும் எனக் கும் யாது சம்பந்தம்? இவைகணிமித்தமாக யான் என் துன்பமுறல்னமான ராம வேண்டும்? என்பனவாதியாகச் சிந்திக்கப்புகின் எல்லாப்பொருள்க ளும் தனக்கு அந்நியமாகத் தோற்றுவதோடு, தான் அறியாமை வசப் பட்டு அப்பொருள்களின் மீதுவைத்த பற்றுத்தான் தனக்குத் துன் பம் தருகின் றதென்ற வுண்மை புலனாகும். இவ்வுண்மை புலனாகவே அவற்றின்கட் கொண்ட பற்று நீக்கத் தலைப்படும்.

**துறக்கு முறை**: - அளவற்ற பொருள்களிடத்தே பற்றுவைத் துத் துன்புற்றிருந்த மனமானது மேற்கூறியவாறு ஆராய்ந்து ஒவ் வொருபொருள்களிடத்துமுள்ள பற்றை விடத் தொடங்கும். அங் நுனத் தொடங்கவே தனது பற்றுதலினின்றும் விலக்கப்பட்ட பொருள்களால் வருந்துன்பமும் அணுகா தொழியும். இந்நிலையிற் பழகி ஒவ்வொரு பொருட்பற்றையும் ஒழித்து வரவே

"யாதெனின் யாதெனின் நீங்கியா னோதல்
அதனின தனினிலன்"

என்றவாறு ஒவ்வொரு பொருள் பற்றிவந்த துன்ப நீக்கத்தால் வர வர அறிவு முதிர்ச்சி பெற்று எல்லாப் பொருட் பற்றுக்களையும் ஒருங்கே விட்டொழிக்குந் துணிவு கொள்ளும். "அடல்வேண் டுமைந் தன் புலத்தை விடல்வேண்டும், வேண்டிய வெல்லா மொருங்கு" எனவும்

"தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றையவர்"

எனவும் கூறியவாறே பிற பொருள்களின் மேற்பற்றுவிட்டமை போன்று உடற்பற்றையும் விட்டொழிக்கவரும்.

"மற்றுந்தோடர்ப்பா டெவன் கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை"

என்றவாறு உடம்பு பற்றையு மொத்து விடுதலமையும். இந்நிலை யில் உடல் மனைவி மக்கள் பொன் பூமியாதிப் பற்றுக்களெல்லாம் ஒருங்கே நீங்கும்.

**துறவு நிலைத்தல்**: - மனமானது எக்காலத்தும் தனித்து நிற்குந் பின்மை யுடையதன்று. பாபசம்பந்த வயப்பட்டுப்பல்வகைப் பொருள் களைப் பற்றிக்கொண்டு சஞ்சல மெய்தி நின்றது. எல்லாப் பொருள் களிடத்துள்ள பற்று முற்றுமற்றுப்போகவே வேறு பற்றதற்கு ஒரு பட துறவு, - 289 பொருள் வேண்டும், பிறிதொருபொருளைப் பற்றாதாயின் மீட்டும் முன்னர் தான் துறந்த பொருள் களிடத்தே பற்றுக்கொள்ளநேரும். ஆதலின் யான் எப்பொருளைப் பற்றினால் எனக்கு அழியாத பேரின் பஞ் சித்திப்பதாகும்? என மெய்யுணர்ச்சி கொண்டு சிந்திக்கப்புகும் புகவே,

"கனியி னுங்கட்டி பட்ட கரும்பினும்
பனிமலர்க்குழற்பாவை நல்லாரினும்
தனிமு டி கவித் தாளு பாசினும்
இனியன் றன்னடைந்தார்க் கிடைமருதனே"

எனவும்.

"என்னின் யாரு மெனக்கினி யாரிலை
என்னி னுமினி யானொரு வன்னுளன்
என்னு ளேயுயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக்
கென்னு ளேநிற்கு மின்னமப ரீசனே"

எனவும்,

"பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"

எனவும் பெரியர் பணித்த மெய்ம்மொழிகளைக் கண்டு தெளிந்து இறை வன் மாட்டே பற்றைச் செலுத்தும் இங்ஙனம் இறைவனைப் பற்றிக் கொண்டு உறைத்து நின்ற விடத்துத்தான் மேலைப் பற்றுக்களெல்லாம் அறவே தொலையும். இந்நிலைதான் உண்மைத் துறவு நிலையாவது.

**துறவிகள் பெருமை**: - முற்றத் துறந்த முனிவர்களது பெருமையை அளவிட்டுக் கூறலியலாவது. அவர்கள் ஆணையைக் கடக்க எத்தேவரானு முடியாது.

“ஐந்தவித்தானாற்ற லகல்விசும்பு ளார்கோமா
னிந்திரனே சாலுங்கரி"

என்பதா லிவ்வுண்மை தெளியப்படும். அகஸ்தியராதி முனிபுங்கவர்க ளியற்றிய அற்புதச் செயல்களைப் புராணவாயிலாக ஆராய்வார்க்குத் துறவிகள் பெருமை யொருவாறு விளங்குவதாகும்.

"எல்லோர்க்குங் காலன் றுறவீவ னீயாமு
னல்லோர் துறப்பர் தா முந்தீபற
நன்றறி வார்களென் றுந்தீபற."

வியாசத்திரட்டு.

சித்தாந்தம் - 1915 ஹு - டிசம்பர் மீ